உ
திருச்சிற்றம்பலம்.

# அறிவினாலடைய வேண்டியது யாது?

மலர் தலையுலகின் மல்கிய உயிர் வர்க்கங்களுள்ளே - மகத்துவம் வாய்ந்த மா நுட தேகத்தைப் பெற்ற நாங்கள் இறைவனருளிச்செய்த வேதாகமங்களில் விதித்தன. செய்து, விலக்கியன ஒழித்து, வீடுபே றடையும் விசிட்ட அறிவுடையோம் என்பது மறுக்கொணாவுண்மையாகும். அரிய இந்தத் தேகத்திலுள்ள ஆன்மாக்களே பெரிய அற்புத ஆற்றலும் அறிவின் றிட்பமு முடையன. இது கரதலாமலகம் போற் காணப்படும் உண்மையாகும். நாங்கள் சின்னாட்பல் பிணிச்சிற்றறிவுடையோ மென்பதைச் சிறிதாவது சிந்தியாது பலவித கர்மங்களையும் மனம் போனபடி செய்து முடிக்கின்றோமன்றி, மனதிலுற்ற வற்றை ஆராய்கின்றோமா? இல்லை! இல்லை! ! ஆராயாமை, நாங்கள் செய்வயையாவும் உயர்ச்சியுடையன என்ற கருத்தேயன்றிப் பிறிதொன்று மன்றாம். ஆகவே, பகுத்தறிவுடைய இந்நன்னிலைமையையீந்த பரம் பொருளாகிய பகவனின் றிருவுள்ளப்படி மனதை நிறுத்தி அறிவினாலே மாண்புடைச் செயலைப்புரிதல் யாவருக்கும் முக்யகடமையாகும். "மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்பதையுங் கவனிக்க,

இங்ஙனம், அறிவை மேற்படுத்தி நல்லன நாடும் நமர்களே பிறந்தவர்கள். அறிவென்னும் அருந்தீபத்தினைப் பிரகாசிக்கச் செய்பவர்'கள். பிறவிப்பெருங்கடலை நீந்திப் பேரின்பமடைவார்கள். எதற்கும் அறிவு வளர்ச்சியே வேண்டியது. அறிவினாலடைதற்பாலது திருவ ருட்சாகரமாய் அரன்றிருவடித் தியான மேயாம். இவ்வறிவு இயற் கையாக அமைந்துள்ளதாமாயினும், கல்வியோடு சேருங்காலத்துட பிரயோசன முடையதாகும். எனவே, இயற்கையறிவு செயற்லே.. யறிவு என்று இருதிற அறிவு மநிதர்களுக்கு உள்ளன என்பதே சித்தாந்தமாம்.

(1.) இங்கே கூறிப்போந்த அறிவு என்ற பதமே யாராயவேண் டியதாகும். அறிவானது நன்மை தீமைகளைப் பகுத்து அறிதற்குச் சாதனமானது. (நன்மையைச் செய்து தீமையையொழித்தல் அறிவின் சக்தியாகும் என்றபடி) அவ்வறிவைத் தீயவழிச்செலுத்துதல் மனக் குற்றமேயன்றி அறிவின் குற்றமன்று.

சராசரப் பொருள்கள் அறிவுள்ளன. எவ்வித அறிவுள்ளன? கன்மத்தின் வன்மை மென்மைகளுக்கு ஏற்ப எடுக்கப்பெற்ற தேகத் திற்கு ஏற்ற அறிவினுயர்வு தாழ்வுகளுள்ளன. இது, பிரத்திய க்ஷம். ஜீவனின் வேறாய்ச்செல்லும் உணர்ச்சி அறிவனாகும். ஆனால், அறிவின் முதிர்ச்சியே உணர்ச்சியாகும். ஆன்மாவை ஆங்கிலத்தில் ((Soul) ஸோல்) என்பர். மநிதனை ஊகிக்கச் செய்து நல்லறிவினை விகஸிப்பிக்குஞ்சக்தி ஜீவனோடு கூடியது. அச்சக்தியின் வளர்ச்சியே அறிவாகும். அறிவினாலுண்டாகும் நுண்ணுணர்ச்சியின் முடிவே பூரணாநந்த ஸ்வரூபியாகிய இறைவனின் பேரருட்டிளைப்பாகும். திரு வள்ளுவநாயனாரும், அறிவு என்னாது உணர்வு என்னும் பதத்தைப் பிரயோகஞ்செய்தனர், உணர்தல் = (சத்துப்பொருளை நாடித்) தெளிந்து நிற்றல். "மனிதன் அறிவுடையனாயிலும், அறிந்த ஒன்றை

நிரூபணஞ் செய்து, அதனிடத்து அழுந்தி நிற்றலே அவனது உணர்ச்சியாகும்,, என்றும் ஆன்றோர் கூறுப.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியவு முண்டே - யதுவென்
ற்றிய விரண்டல்ல னாங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமுமாம்.

என்ற அருட்டிருவாக்கையும் நோக்குக. ஆன்மா அறிவாகாது. அறிவினாலே ஆன்மா அலனுருவடையும், ஆகவே, ஆன்ம ஞானத்தி னாலே சிவஞானமும் சிவஞானமுடிவே பேரின்பவாழ்வு மாகுமென் பது தெளிக.

(2) இன்னும் அறிவானது இலௌகிக அறிவு என்றும், வைதிக அறிவு என்றும் இருவகைப்படும். உலகசம்பந்தமான அறிவு ஆன்மா வுக்கு உத்தம உயர்வினைக்கொடுக்க மாட்டாது. வைதிக அறிவா னது வேதோக்த சம்பாவனா நிலையானே ஆன்மாவை ஆநந்த மயமாக்கு மியல்பினது,

இலௌகிக அறிவாவது : தேகம் உலகம் ஆகிய இவற்றின் அறி த்த உண்மையினை விசாரியாது தேக போஷனையினையும் உலக இன் னையும் பெரிதாக மதித்தும், சுற்றத்தார் புத்திரர் மனைவி மக்கள் மாட்டு உறைத்த அன்பு கொண்டும், இறைவனைத் தியானஞ் செய்யாது காலத்தை அவகாலமாகப் போக்குதன் முதலியன. உலக ஏடனைகளை விடாதவன் மோக்ஷாநந்தத்தைப் பெறமாட்டானாகையாலும், நாங்கள் உலகமும் தேகமும் அறிதலைப் பிரமாணமின் றிக்காண்டல் ஒருதலையாகையாலும், நிலையுடையான்மாவின் உயர் கதிகருதி நாளடைவில் உலகப்பற்றை ஒருத்தலே சால்புடைத்தாகும். அறிவினாலடையவேண்டியது இஃதேயாம்.'மெய்ப்பொரு காண்ப தறிவு'என்ற செந்நாப்போதார் திருவாக்கும் இந்நற்பொருளைத் தெளியத் தெரித்தல் காண்க.

வைதிக அறிவாவது, "வேதயதீதிவேத:" என்றபடி அறிவிக்கின்ற அறிவனருள் வாக்காய வேதாகமமுறை பிறழாது கர்ம உபா சனாதிகளை அநுஷ்டித்து ஞானத்தைப் பெறுதலே முக்கியமானது எனக்கொண்டு, பதிபசுபாசமாகிய முப்பொருளுண்மையையும், ஆன் மாபாசத்தை விட்டு நீங்கும் வழியையும் நாடி உலகவின்பங்களை உவர் த்து, அத்துவிதாநந்தப் பேறுகருதி இறைவன் மாட்டுப் பக்தியை வளர்த்து வருதல்.

வைதிக ஞானமே மேம்பாடுடையது, சிவதீக்ஷையே முதலில் வேண்டப்படுவது, தீக்ஷையினாலன்றி ஆன்மா மோக்ஷத்தைப் பெற மாட்டாது. இதனாற்றான் சிவதீக்ஷை பெற்றுச் சீவகாருண்ய மாகிய பரமதருமத்தினாலே மனப்பரிசுத்தமடைந்து, நிமலனை என்றும் மற வாது நினைந்துருகிப் புறத்தும் அகத்தும் பூகிக்கவேண்டும். பூசாகாலத்திலே நாங்கள் கடவுளுடைய அடிமைகள்

என்றும், நாங்கள் வைத்திருக்கும் பொருள்கள் யாவும் அவனுடைமைப் பொருள்கள் என்றும்'உள்ளவாறு நினைந்து வழிபாடாற்றல் வேண்டும்.

முதலிலே கர்மங்களைச் செய்து ஞானத்தைப் பெறலாமன்றி, நாங்கள் ஞாநிகள் என்ற வாய்ப்பறை சாற்றினாலே அகம்பாவ முடையோர் அறிவுடையோராக மாட்டார். ஆதலால் முத்தி நிலையில் ஆன்மா அவ்விறைவன் மயமாகி அறிவானாய ஆரந்தத்தையடையச் செய்தலே சீரியதாகும். திருவருளும் முன்னின்று செய்வதாக, துணை செய்வதாக.

“சிவோதாதா சிவோ போக்தா சிவஸ் ஸர்வ மிதம் ஜகது" என்பதும்,

“நாவார நம்பனையே பாடப்பெற்றே
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம் -
ஆவாவென் றெமையாள்வா னமார்நாத
னயனொடுமாற் கறிவரிய வனலாய் நீண்ட
தேவாதி தேவன் சிவனென் சிந்தை
சேர்ந்திருந்தான் றென்றிசைக் கோன்றானே வந்து.
கோவாடிக் குற்றேவல் செய்கென்றாலுங்
குணமாகக் கொள்ளோ மெண் குணத்து ளோமே,,

என்பதும் முறையே உடல்பொருள் ஆவி அனைத்தும் இறைவனுக்கே உரியதென்று பக்தி யோடுதத்தஞ் செய்ய வேண்டிய முறைமையினையும்,

அம்முறைவழி பாட்டினால் ஆன்மா அவ்விறைவன் குணங்கள் செறிந்து அவனுடன் ஐக்யமுற்றுப் பேரின்பமடையும் என்பதையும் வலியுறுத்தல் காண்க.

## முடிவுரை

சுருக்கிக்கூறிய சிலவாக்கியங்களினாலும், சில ஆன்றோர் தெளி வுடைத் திருவாக்குக்களினாலும், ஆன்மாவையுணர்ந்து அறிவனைத் - தேர்ந்து மலவாதனையை நீத்தலே அறிவினாலடைய வேண்டியது யாது? என்னும் வினாவிற்கு விடையாமாறு அறிக.

பின்வரும் திருமூலயோகிகள் திருவாக்கைக் காட்டி முடிக்கின்றாம். சுபமஸ்து.

அவமுஞ் சிவமு மறியா ரறியார்
அவமுஞ் சிவமு மறிவா ரறிவார்
அவ முஞ் சிவமு மருளா லறிந்தால்
அவமுஞ் சிவமு மவனரு ளாமே.

திருச்சிற்றம்பலம்.

இங்ஙனம்
வ. மு. இரத்திநேசுவரையர்
தமிழ்ப்பண்டிதர்.

சித்தாந்தம் - 1914 ஹூ - நவம்பர் மீ